# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம்
நெல்வளமே நாட்டின்வளம்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 2 விளைச்சல் : 13 திருவள்ளுவர் ஆண்டு 2052 சூன் திங்கள் – 2021

## உள்ளே...





# கட்டடக் கலைச்சொற்கள்

1. Adobe - பசுமைக்கல்/சுடாதசெங்கல்
2. Aggregate - கற்கோவை
3. Architecture - கட்டடக்கலை
4. Balcony - மாடிமுற்றம்/ மதலைமாடம்
5. Baluster - கந்தணி/ சிறுதூண்
6. Buttress - உதைசுவர்
7. Canopy - கவிகை
8. Ceiling - உட்கூரை
9. Cob - வைக்களிச்சுவர்
10. Concrete - கற்காரை
11. Corbel - தண்டையம்
12. Cottage - சிற்றில்
13. Courtyard - முற்றம்
14. Rammed earth - திமித்த மண்
15. Verandah - தாழ்வாரம்
16. Window - சாளரம்/ காலதர்
17. Cost effectiveness - பயன்செலவுதிறன்
18. Cone - கூம்பு
19. Arc - வட்டை / வளைவு
20. Arch - கமான்/கவான்/ வளைவு
21. Curing - பதப்படுத்தல்
22. Rat trap bond - எலிப்பொறிக்கட்டு / எலிப்பொறிப் பிணைப்பு
23. Sphere - கோளம்
24. Eco friendly building - சூழலியல்கட்டடம்
25. Stack effect - அடுக்குவளைவு

சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.


# சொல்வயல்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

திருவள்ளுவர் ஆண்டு 2052 - வைகாசி
சூன் திங்கள் 2021

ஆசிரியர் : **தங்க.காமராசு**
இயக்குநர்

பொறுப்பாசிரியர் : முனைவர் வே. கார்த்திக்

இதழ்க்குழு : திருமதி. ஜெ. சாந்தி
திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திரு. ப. தீபக்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர், சென்னை - 600 028.
கட்டணமில்லா அழைபேசி : 14469
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com


உலகத் தமிழர்களின் படைப்புகள், செய்தித் துணுக்குகள், நிகழ்வுகளின் ஒளிப்படங்கள் ஆகியவை வரவேற்கப்படுகின்றன



## ஆசிரியர் பேசுகிறார்

# புதிய விடியல்கள்

அன்பானவர்களே வணக்கம்!

“ஸ்டாலின்தான் வாராரு! விடியல் தரப் போறாரு!” என்ற பாடலும் வாசகங்களும் சட்டசபைத் தேர்தலுக்கு முன்பு தமிழ்நாட்டில் பட்டிதொட்டியெல்லாம் பரவியது. அதை ஓர் அரசியல் பரப்புரையாக மட்டுமே அப்போது நம்மால் கருதமுடிந்தது. தேர்தலுக்குப் பின்பு புதிய ஆட்சி மலர்ந்தபோதுதான் அந்தப் பரப்புரையின் உண்மையான பொருளை நம்மால் உணர முடிந்தது.

மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் அவர்கள் ஒரு கதிரவனாக உதித்து, தமிழ்நாட்டிற்குப் பல விடியல்களை அமைச்சர்களாகவும் அரசு உயர் அலுவலர்களாகவும் தந்திருக்கிறார். அகரமுதலி இயக்ககத்துடன் தொடர்புடைய ஒரு சில விடியல்களைப் பற்றி மட்டும் நான் இங்குச் சுருக்கமாகக் குறிப்பிட விரும்புகின்றேன்.



### ஒரு மாணவனாக வந்திருக்கிறேன்!

புதிய அமைச்சரவைப் பட்டியலில் மாண்புமிகு தமிழ் வளர்ச்சித்துறை அமைச்சராக அறிவிக்கப்பட்ட திரு. தங்கம் தென்னரசு அவர்களை ஒரு புதிய விடியலாக நாங்கள் பார்க்கிறோம். மூத்தவர்களையும் ஆசிரியர்களையும் அறிஞர்களையும் பணிவுடன் மதிக்கத் தெரிந்த ஒரு பண்பாளர் அவர் என்பதை 2010 ஆம் ஆண்டு நடந்த ஒரு நிகழ்வு எனக்கு உறுதிப்படுத்தியது.



அப்போது அவர் பள்ளிக் கல்வித் துறை அமைச்சராக இருந்தார். நிமிடத்திற்கு நிமிடம் கூட்டங்கள், பள்ளி ஆய்வுகள், சுற்றுப்பயணங்கள் என அவர் சுறுசுறுப்பாக இயங்கிக் கொண்டிருந்த நேரத்தில், வில்லிவாக்கம் அரசு மகளிர் மேனிலைப்பள்ளியில் நடந்த ஒரு நிகழ்ச்சியில் எந்தவித ஆரவாரமும் இல்லாமல் கலந்துகொண்டார். நிகழ்ச்சியில், “இப்போது உங்களுக்குத் தலைமையாசிரியராக இருந்து வழிகாட்டிக்கொண்டிருக்கும் திருமதி.பொம்மக்காள் அவர்கள்தான் எனக்கு ஆசிரியராக இருந்து வழிகாட்டினார். அவரை நேரில் பார்த்து மரியாதை செலுத்தவே ஒரு மாணவனாக நான் இங்கு வந்திருக்கிறேன்” என்று மனம் உருக அவர் பேசியபோது, அந்த வளாகத்தில் கூடியிருந்த அத்தனை மாணவிகளும் ஆசிரியர்களும் எழுந்துநின்று விண்ணதிர கரவொலி எழுப்பினார்கள். கரவொலி எழுப்பியவர்களில் அதே பள்ளியில் தமிழாசிரியராகப் பணியாற்றிய நானும் ஒருவன்.

அத்தகைய பெருந்தகையாளர் தமிழ் வளர்ச்சித்துறை அமைச்சராகப் பொறுப்பேற்றிருப்பது காலப்பொருத்தமும் சாலப்பொருத்தமும் ஆகும். அவரால் தமிழ்மொழிக்குப் புதிய வெளிச்சத்தைப் பாய்ச்சமுடியும்.

### கோப்புகளை இதயம் கொண்டு தீர்வு காணுங்கள்!

முனைவர் வெ. இறையன்பு இ.ஆ.ப. அவர்கள் நிருவாகத்தில் கண்டிப்பும் பழகுவதில் கனிவும் மிக்கவர். நிருவாக ஆளுமை, மொழி ஆளுமை இரண்டிலும் உச்சம் தொட்டவர். எழுத்தாலும் பேச்சாலும் இலட்சக்கணக்கான உள்ளங்களைக் கொள்ளைகொண்டவர் என்று அவரைப் பாராட்டிக்கொண்டே போகலாம். இப்படிப்பட்ட பாராட்டுகளை அவர் ஒரு காலமும் விரும்பமாட்டார் என்பதை நான் நன்கு அறிந்திருந்தும், அவரை இங்கே பதிவு செய்ய வேண்டிய கட்டாயமும் கடமையும் எனக்கு இருக்கிறது.



29.8.2019 அன்று சென்னை எத்திராசு மகளிர் கல்லூரியில் நடைபெற்ற அகராதியியல் விழிப்புணர்வுக் கூட்டத்தில் கலந்துகொண்டு அன்னைத்தமிழ் வளர்ச்சிக்கும் பாதுகாப்பிற்கும் அகரமுதலிகளும் அகரமுதலித் திட்ட இயக்ககமும் ஆணிவேராகத் திகழ்கின்றன என்பதைப் பல எடுத்துக்காட்டுகளுடன் உறுதிப்படுத்தி அவர் ஆற்றிய உரை, அரங்கத்தில் அமர்ந்திருந்த 1600க்கும் மேற்பட்ட மாணவமாணவிகளுக்குப் புதிய தெளிவையும் ஊக்கத்தையும் தந்தது. அந்த உரை மறுநாள் ஊடகங்களில்

வெளிவந்து உலகத் தமிழர்களை அகரமுதலி இயக்ககத்தின் பக்கம் திரும்பிப் பார்க்க வைத்தது. அவருடைய உரையில் தெறித்த கருத்துத் திவலைகளைக் கொண்டு அடுத்த கூட்டத்திற்குச் 'சொல்லாக்கப் பயிலரங்கம்' என்று பெயரை மாற்றி விட்டோம். அரசு அலுவலர்களுக்கு அவர் ஆலோசனை கூறும்போது, "கோப்புகளை உங்கள் மூளையை மட்டும் கொண்டே தீர்வு காண முயலாதீர்கள், உங்கள் இதயம் கொண்டும் தீர்வு காணுங்கள். ஏனெனில், மூளை அதில் உள்ள குறைகளை மட்டுமே காணும். இதயம்தான் சம்பந்தப்பட்ட மக்களின் வலியைக் காணும்" என்ற உயரிய தத்துவத்தைப் பல உள்ளங்களில் விதைத்தது அவர் பட்டறிவும் படிப்பறிவும் மிக்க ஒரு தமிழ்ஞானி என்பதை மக்களுக்கு அடையாளப்படுத்தியது. அகரமுதலி இயக்ககத்தின் செயல்பாடுகள் அனைத்தையும் அறிந்த ஓர் அறிஞர் தமிழகத்தின் தலைமைச் செயலாளராகப் பொறுப்பேற்றிருப்பது இவ்வியக்ககத்திற்குப் புதிய விடியலையும் நம்பிக்கையையும் தந்திருக்கிறது

### பலமணிநேரம் தூயதமிழில் பேசமுடியும்!

ஒருவரே சங்க இலக்கியத்திலும் கணினித் தொழில்நுட்பத்திலும் கரைகடந்தவராக இருக்கமுடியும் என்று தன் பேச்சாலும் செயலாலும் உறுதிப்படுத்தி இருப்பவரே திரு.த.உதயச்சந்திரன் இ.ஆ.ப. அவர்கள். பல இணைய மாநாடுகளிலும் மொழியியல் மாநாடுகளிலும் அவருடைய உரையை உற்றுக் கவனித்துக் கடகடவென்று குறிப்பெடுத்தவர்களில் நானும் ஒருவன். அண்மைக்காலத்தில் சமச்சீர்க் கல்விக்கான பாடத் திட்டத்தின் வடிவமைப்பில் அவருடைய மதிநுட்பத்தை அறிந்த கல்வியாளர்களும் மாணவர்களும் இன்றும் அவரை வெகுவாகப் பாராட்டிக்கொண்டிருக்கிறார்கள். நேர்மை, துணிவு, அறிவுக்கூர்மை ஆகிய மூன்றையும் பலமாகக் கொண்டு உயரிய இலக்கை நோக்கி வெற்றிப் பயணம் செய்து கொண்டிருப்பவர் அவர்.



நான் அவரைப் பார்த்ததும் பழகியதும் குறைந்த காலமே என்றாலும் அவரைப் படித்தது நிறைய காலம். என் அழைப்பை ஏற்று 11.3.2020 அன்று தமிழ்நாடு டாக்டர் எம்.ஜி.ஆர். மருத்துவப் பல்கலைக் கழகத்தில் நடைபெற்ற 'தமிழ் அகராதியியல் நாள் நிறைவு விழா'வில் கலந்துகொண்டு அவர் ஆற்றிய ஊக்கவுரை அந்த அரங்கத்தில் கூடியிருந்த 1600க்கும் மேற்பட்ட மாணவ மாணவிகளையும், பன்னாட்டுத் தமிழ் அறிஞர்களையும் வியப்பில் ஆழ்த்தி, சிந்தையை விரிவுபடுத்தியது. கற்காலம் முதல் கணினிக்காலம் வரை படிப்படியாகச் சொற்கள் உருவான வரலாறு, சொற்றொகுப்பால் ஏற்பட்ட மொழிக்கட்டமைப்பு, மொழிக்கலப்பு, சொற்சிதைவு, பழஞ்சொற்கள் மீட்டுருவாக்கம் எனப் பல்வேறு கோணங்களில் அவர் ஆற்றிய ஆய்வுரையின் வீச்சு அகரமுதலி இயக்ககத்தில் ஆவணமாகக் காக்கப்படுவதுடன், தேவைப்படும்போதெல்லாம் மாணவர்களின் சிந்தையிலும் சேர்க்கப்பட்டுவருகிறது. "இலட்சக்கணக்கான தமிழ்ச் சொற்களை நாம் பெற்றிருக்கிறோம். அதனால் பிறமொழிச் சொற்களைக் கடன் வாங்காமல் நம்மால் பலமணிநேரம் தூயதமிழில் பேசமுடியும்" என்ற அவருடைய தீர்வுதான் ஆயிரக்கணக்கான இளைஞர்களைத் தூயதமிழ்ப் பற்றாளர்களாக மாற்றியது. அத்தகைய ஆற்றல் மிக்கவர் மாண்புமிகு முதலமைச்சர் அவர்களின் முதன்மைச் செயலாளராகப் பொறுப்பேற்றிருப்பது இவ்வியக்ககத்திற்குப் புதிய விடியலைத் தந்திருக்கிறது.

### இன்முகமும் இயல்பான தமிழும்

2009ஆம் ஆண்டு தூய்மையான காவிரியை மீட்டுருவாக்கம் செய்யும் விழிப்புணர்வுப் பேரணியைக் கரூரிலிருந்து பூம்புகார் வரை நடத்துவது தொடர்பாக, சோழமண்டல அரிமா சங்கத்தினருடன் சேர்ந்து அப்போது தஞ்சாவூர் ஆட்சியராக இருந்த திரு.எம்.எஸ். சண்முகம் இ.ஆ.ப. அவர்களை நான் சந்தித்திருக்கின்றேன். எங்களின் பொதுநல நோக்கத்தைப் பாராட்டியதோடு, தான் அரசு விதிகளுக்கு உட்பட்டு முழு ஒத்துழைப்பு நல்குவதாகவும் உறுதிகூறினார். தன்னைச் சந்திக்க வருபவர்களின் கோரிக்கைகளை நின்று பொறுமையாகக் கேட்டு, இன்முகத்துடன் உள்வாங்கிக்கொண்டு தீர்வு காணும் அவரின் அணுகுமுறை அவர் ஓர் ஆட்சியர் என்பதையும் தாண்டி குமுகாய நலனில் மிகுந்த அக்கறை கொண்டவர் என்பதை இன்றும் வெளிப்படுத்துகிறது.

செயற்கைத்தனம் இல்லாத இயல்பான அவருடைய தமிழ்ப் பேச்சை நான் உற்று அமைதியாகக் கவனித்துப் பலமுறை மகிழ்ந்திருக்கிறேன். இன்முகத்தையும் இயல்பான தமிழையும் இருபெரும் பலமாகக் கொண்டு மாண்புமிகு முதலமைச்சர் அவர்களின் செயலாளராகப் பொறுப்பேற்று, தமிழ் வளர்ச்சித்துறையின் மனசாட்சியாகச் செயல்படும் அவரும் ஒரு விடியலாகவே எங்களுக்குத் தெரிகிறார். இப்படி தமிழ்வளர்ச்சித்துறை பல விடியல்களைக் கண்டிருப்பதால் '**முத்தமிழறிஞர்**' **டாக்டர் கலைஞர்** அவர்களால் தோற்றுவிக்கப்பெற்ற செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் புதிய வேகத்துடனும் புதுமையான திட்டங்களுடனும் உலகத் தமிழர்களைச் சந்திக்கும். தொற்றுக்காலத்திலும் துவண்டுவிடாமல் எப்போதும் போலச் சுறுசுறுப்பாகத் தமிழ்ப்பணியாற்றிக் கொண்டிருக்கும் அகரமுதலி இயக்ககத்தை ஆயிரக்கணக்கானவர்கள் இணையம் வழியாக உற்றுக் கவனித்துக்கொண்டிருக்கிறார்கள். அன்புள்ளம் கொண்டவர்களே! தமிழ்மீது அளவுகடந்த பற்றுக்கொண்டவர்களே! நீங்கள் எப்போதும் இவ்வியக்ககத்தோடு இணைப்பில் இருங்கள், எங்களோடு இணைந்தே இருங்கள்.



மீண்டும் சந்திப்போம்





# தமிழ்நாடு அரசின் சார்பில் ஆங்காங்கில் ‘அகரமுதலி’ விருது வழங்கும் நிகழ்ச்சி!

## ஆங்காங் தமிழ்ப் பண்பாட்டுக் கழகம் நடத்தியது!

தமிழ்நாடு அரசு செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் அண்மைக் காலமாகப் பல்வேறு திட்டங்களைச் செயற்படுத்தி வருகிறது.

அவற்றில் சொற்குவை வலைத்தளம், தமிழ்க் கலைக்கழகம், கட்டணமில்லா அழைமையம், சொல்லாக்கப் பயிலரங்கம், அகராதிகள் உருவாக்கம் போன்றவை உலகத் தமிழர்களை வெகுவாகக் கவர்ந்து வருகின்றன.

தூயதமிழ்ப் பயன்பாட்டை ஊக்கப்படுத்தும் வகையில் கடந்த ஆண்டு 80 பேர் பெறும்வகையில் ஆறுவகையான விருதுகளைத் தமிழ்நாடு அரசு அறிவித்தது. அவற்றில் வீரமாமுனிவர் விருதும், தேவநேயப் பாவாணர் விருதும் குறிப்பிடத்தக்கவையாகும்.

அகராதியியல் துறையில் சிறந்த பங்களிப்பை வழங்கும் உள்நாட்டு அகராதி அறிஞருக்கு வழங்கப்படும் தேவநேயப் பாவாணர் விருது முனைவர் கு.சிவமணி (90அகவை) அவர்களுக்குத் தமிழ்நாடு முதலமைச்சர் அவர்களால் வழங்கப்பட்டது.

தமிழைத் தாய்மொழியாகக் கொள்ளாத, ஓர் அயல்நாட்டு அகராதி அறிஞருக்கு வழங்கப்படும் வீரமாமுனிவர் விருது ஆங்காங் நாட்டைச் சார்ந்த முனைவர் கிரிகோரி ஜேம்சு (85 அகவை) அவர்களுக்கு அறிவிக்கப்பட்டது.

கொரோனா பெருந்தொற்றின் காரணமாகச் சென்னைக்கு வந்து அவரால் இவ்விருதைப் பெற இயலவில்லை. எனவே, இவ்விருது ஆங்காங் தமிழ்ப் பண்பாட்டுக் கழகத்திற்கு அனுப்பி வைக்கப்பட்டு, அவர்கள் வாயிலாக முனைவர் கிரிகோரி ஜேம்சு அவர்களுக்கு வழங்க ஏற்பாடு செய்யப்பட்டது.

ஆங்காங் உட்லாண்ட்ஸ் உணவு விடுதியில் நடத்தப்பட்ட நிகழ்ச்சியில் முனைவர் கிரிகோரி ஜேம்சுக்குத் தமிழ்நாடு அரசின் சார்பில் வீரமாமுனிவர் விருது வழங்கப்பட்டு, அவருக்குச் சிறப்புச் செய்யப்பட்டது.

விருதைப் பெற்றுக் கொண்ட முனைவர் கிரிகோரி ஜேம்சு அவர்கள் தனது ஏற்புரையில், “இப்போது எனக்கு வழங்கப்பட்டிருக்கும் விருதை உலகின் உயரிய விருதாக நான் கருதுகிறேன்.



400 ஆண்டுக்கால தமிழ் அகராதிகளை ஆய்வுசெய்து நான் எழுதிய The History of Tamil Dictionaries என்ற நூலுக்காக இந்த விருது வழங்கப்பட்டுள்ளது. இந்த நூலை உருவாக்க நான் பல ஆண்டுகள் செலவு செய்திருக்கிறேன்.

என் உழைப்பை அங்கீகரிக்கும் வகையில் ஆங்காங் நாட்டில் ஒரு மூலையில் வாழ்ந்து வரும் 85 வயதுடைய என்னைத் தேடிக் கண்டுபிடித்து இந்த விருதை வழங்கியிருக்கும் தமிழ்நாடு அரசை நான் நன்றியுடன் பாராட்டுகிறேன்.

இந்த விருதை ஆங்காங் தமிழ்ப் பண்பாட்டுக் கழகத்தின் வாயிலாகப் பெறுவதில் பெருமைகொள்கிறேன்” என்று உணர்ச்சிப் பொங்கப் பேசினார்.

ஆங்காங் தமிழ்ப் பண்பாட்டுக் கழகத்தின்




செயலாளரும் இந்நிகழ்ச்சி அமைப்பாளருமான திருமதி. கலைஅருண் அவர்கள் தன்னுடைய நன்றியுரையில், ''தமிழ்நாட்டின் மிக உயரிய விருதான வீரமாமுனிவர் விருதை ஆங்காங் தமிழ்ப் பண்பாட்டுக் கழகத்தின் வழியாக வழங்குவதில் நாங்கள் பெருமைப்படுகிறோம்.

அதற்காகத் தமிழ்நாடு அரசுக்கும், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்திற்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றோம்'' என்றார். மேலும், ''இனிவரும் காலங்களில் ஆங்காங் தமிழ்ப் பண்பாட்டுக் கழகம் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தோடு இணைந்து தமிழ்ப்பணியாற்றும்'' என்றார்.

திரு.இரகுமான் அவர்களின் உதவியுடன் ஆங்காங் தமிழ்ப் பண்பாட்டுக் கழகத்தின் முன்னாள் தலைவர் பொறியாளர் மு.இராமநாதன் அவர்களின் ஒருங்கிணைப்பில், செயலாளர் திருமதி.கலைஅருண் அவர்களின் ஏற்பாட்டிலும் கழகத் தலைவர் எஸ்.எம்.கே.முகமது இஸ்மாயில் அவர்களின் தலைமையிலும் நடைபெற்ற இந்நிகழ்ச்சியில் உட்லாண்ட்ஸ் உணவகத்தின் உரிமையாளர் திரு.பி.இ.அருண், கழகப் பொருளாளர் திரு.எஸ்.பி.தமிழ்ச்செல்வன், திரு.உவைஸ்நூரு போன்ற பலர் கலந்துகொண்டர்கள். ■



# இல்லந்தோறும்...

# இனிய தமிழ் பேசுவோம்!

## மகளிர் நடத்திய இணையவழிக் கருத்தரங்கம்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்துடன் கோவை இன்தமிழ் இல்லத்தரசிகள் சங்கம் இணைந்து நடத்திய ‘இல்லந்தோறும் இனிய தமிழ் பேசுவோம்’ என்ற இணையவழிக் கருத்தரங்கு 15.05.2021 காரிக்கிழமை, மாலை 7.00 மணிக்குத் தொடங்கி நடைபெற்றது.

இந்நிகழ்வில் வரவேற்புரையாற்றிய, கோவை ஹைஃகான் மெஷின் வடக்கு மண்டல மேலாளர் முனைவர் அ.ஷர்மிளா பானு அவர்கள், “தொடக்கத்தில் 8 பேர் மட்டுமே இருந்த இக்குழுவில் இன்று 60 பேர் இருக்கிறார்கள் என்று மகிழ்ச்சியுடன் தெரிவித்துக்கொண்டார். இக்குழுவில் மாநிலங்களைத்தாண்டி, நம் நாட்டைத்தாண்டி உலக அளவில் இங்கிலாந்து மற்றும் அமெரிக்கா போன்ற அயல் நாடுகளில் உள்ளவர்களும் இணைந்திருப்பது மிகப் பெரிய வெற்றி என்றும், இக்குழுவில் இல்லத்தரசிகள் மட்டுமின்றி மருத்துவர்கள், மாணவர்கள் மற்றும் பலதுறைகளைச் சார்ந்தவர்களும் இருக்கிறார்கள்” என்றும் தெரிவித்தார். மேலும், “ஒருமுறை வந்தால் கனவு, இருமுறை வந்தால் ஆசை, பலமுறை வந்தால் அது இலட்சியம் என்ற டாக்டர் ஏ.பி.ஜெ.அப்துல்கலாம் ஐயா அவர்களின் சொற்களை வழியாக எடுத்துக்கொண்டு இக்குழுவானது உலகம் முழுவதும் பரவிட வேண்டும்” என்றும் தம் கருத்தை எடுத்துரைத்தார்.

கருத்தரங்கில் நோக்கவுரையாற்றிய செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்குநர் திரு.தங்க. காமராசு அவர்கள், “வெற்றியை நோக்கிப் பயணித்துக் கொண்டிருக்கிற இக்குழு மிகப்பெரிய ஓர் அமைப்பாகவும், இயக்கமாகவும் உருவெடுக்க அகரமுதலி இயக்ககம் உறுதுணையாக இருக்கும்” என்று தெரிவித்தார். “தமிழ்மொழியின் பாதுகாப்பை முதன்மை நோக்கமாகக் கொண்டே அகரமுதலி இயக்ககம் தோற்றுவிக்கப்பட்டதாகக் கூறிய அவர், பள்ளிக் குழந்தைகள் வீடுகளில் தாய்மொழியில் பேசினால்தான் அடுத்த தலைமுறையினரிடையே தமிழ்மொழி நிலைத்திருக்கும்” என்றும் கூறினார்.

வாழ்த்துரை வழங்கிய திருச்சி, பிஷப்ஹீபர் கல்லூரித் தமிழ்த்துறை உதவிப்பேராசிரியர் முனைவர் வீ.மீனாட்சி அவர்கள், “இந்தியாவில் முதலில் மொழிக்கு அச்சு வடிவம் கொண்ட மொழி தமிழ்மொழி என்று கூறினார். தமிழ்மொழியின் வளர்ச்சி என்பது சங்கம் தொடங்கி இன்று பல்வேறு அரசு நிறுவனங்கள்வழி மேம்படுத்தப்பட்டு வருகிறது. ஆனாலும் இன்று நம் பிள்ளைகளிடம் இல்லத்தில் நல்ல தமிழ் பேசும் வழக்கத்தை ஏற்படுத்தவேண்டிய கட்டாயம் இருக்கிறது. அதற்கு நாம் இல்லங்களில் பிள்ளைகளிடம் பேசும்போது தமிழ்ச் சொற்களைப் பயன்படுத்த வேண்டும். வட்டார வழக்குச் சொற்களைப் பயன்படுத்த வேண்டும். வாசிப்புப் பழக்கத்தை ஊக்குவிக்க வேண்டும். நம் தமிழ்மொழியின் சிறப்பினைக் குழந்தைகள் மனத்தில் பதியும்படி செய்ய வேண்டும்” என்று கூறினார்.



முனைவர் வீ.மீனாட்சி

கோவை ஜி.டி, மெட்ரிக் மேனிலைப்பள்ளித் தமிழாசிரியர் முனைவர் மாலதி சுரேஷ்.கோ. அவர்கள் தன் வாழ்த்துரையில், “ இஞ்சி, பூண்டு, எலுமிச்சை, மல்லி விதை, மிளகு, சீரகம், சிறு வெங்காயம், பட்டை, இலவங்கம், ஏலக்காய், மஞ்சள், பெருங்காயம் போன்றவை உணவுப் பொருள்கள் மட்டுமல்ல, அவை தமிழர்களின் மருந்துப் பொருள்களுமாகும்” என்று கூறினார். மேலும், “நம் முன்னோர்கள் எதனையும் காரணமின்றிக் கூறிவிடவில்லை என்பதனை மனத்தில் புகுத்திக்கொண்டும், இனிவரும் தலைமுறையாவது உடல்நலத்துடன் வாழ வேண்டும் என்பதனைக் கருத்தில் கொண்டும் நமது பாரம்பரிய மரபு சார்ந்த உணவினை ஏற்று நலமோடும் வளமோடும் வாழவேண்டும் என்றும், தமிழர்களின் உணவுப் பழக்கவழக்கங்களில் உடல்நலமும் கலந்துள்ளது என்பதனைக் குழந்தைகளுக்கு எடுத்துரைக்க வேண்டும்” என்றும் எடுத்துரைத்தார்.



முனைவர்
மாலதி சுரேஷ்.கோ.

திருச்சி, ஆழி கட்டடக்கலைஞர் கவிஞர் அறிவுக்கரசி மணிவண்ணன் அவர்கள் தன் வாழ்த்துரையில், “சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள் ‘காலதர், சாளரம்’என்று காற்று நுழையும் வழிக்கான தூயதமிழ்ச் சொற்களைக் கூறியுள்ளார் என்றும், இப்போது அதனைக் குறிக்க ‘ஜன்னல்’ என்ற பிறமொழிச் சொல் பயன்பாட்டில் உள்ளதாகவும் கூறினார்.



கவிஞர்
அறிவுக்கரசி மணிவண்ணன்

"தமிழ்மொழியின் உச்சரிப்புக் குறித்துத் தொல்காப்பியர் 'பிறப்பியலில்' எழுதியுள்ளார்" என்று குறிப்பிட்ட அவர், "தமிழ் இலக்கியங்களைப் பல வடிவங்களில் மாற்றுதல், தமிழ் இலக்கியங்கள் மற்றும் நூல்கள் வாசிப்பை ஊக்குவித்தல், அன்றாட வாழ்வில் சரியான தமிழ்ச் சொற்களைப் பயன்படுத்துதல், ஊடகங்களில் தமிழ்ச் சொற்களைக் கையாளுதல், மொழிபெயர்ப்புகள் செய்தல், போட்டிகள் வைத்தல், வாசிக்கும் நிகழ்வுகள் நடத்துதல் போன்ற பல செயல்களை விடாமல் காலமுறையில் செய்தால் தமிழ் உயிர்ப்புடன் இருக்கும்" என்றும் பேசினார்.

மேலும், "ஆங்கிலத்தில் இருக்கும் கட்டடக்கலை நூல் தொடர்பான ஒன்றைத் தமிழில் மொழிபெயர்த்துவரும் தனக்கு மிகப்பெரும் உதவியாக இருப்பது செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் சொற்குவை வலைத்தளத் தேடுபொறியும், தமிழ் இணையக் கல்விக் கழகத்தின் இணையத்தில் உள்ள பல அகராதிகளும்தான்" என்றுகூறிய அவர், "தமிழை நிலைநிறுத்த நல்ல தமிழ்ப்பெயர்களைப் பிள்ளைகளுக்குச் சூட்டலாம், நண்பர்கள் மற்றும் உறவினர்களுக்கும் இதனைப் பரிந்துரைக்கலாம்" என்றும் கூறினார்.

தமிழார்வலர்கள், பல துறை சார்ந்த வல்லுநர்கள், கல்லூரி மாணவர்கள், விருதாளர்கள், பேராசிரியர்கள் உள்ளிட்டோர் பார்வையாளர்களாகப் பங்கேற்ற இக்கருத்தரங்கில் அகரமுதலி இயக்ககத் தொகுப்பாளர் திருமதி.ஜெ.சாந்தி தொடக்கவுரையாற்ற, நிறைவில் கோவை, சுயஉதவிக்குழுத் தலைவர் திருமதி. அ.பர்வீன் பானு அவர்கள் நன்றியுரை கூறினார். சென்னை. மதிப்புறு மொழியியல் பயிற்றுநர் முனைவர் ஆ.இந்திரா பிரியதர்ஷினி கருத்தரங்க நிகழ்வுகளைத் தொகுத்து வழங்கினார். ■

## செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கத்தின் இயக்குநர்கள் பட்டியல்

| | |
|---|---|
| 'மொழி ஞாயிறு' **ஞா.தேவநேயப் பாவாணர்,** இயக்குநர் | 08.05.1974<br>16.01.1981 |
| திரு. **இரா.மதிவாணன்** இயக்குநர் (முழுக்கூடுதல் பொறுப்பு) | 28.01.1981<br>08.05.1988 |
| இவ்வியக்ககம் தமிழ்வளர்ச்சி இயக்ககத்துடன் இணைக்கப்பட்டது | 09.05.1988<br>18.06.1989 |
| **முனைவர் இரா. மதிவாணன்** முதன்மைப் பதிப்பாசிரியர் இயக்குநர் | 19.06.1989<br>30.06.1994 |
| திரு. **முத்துபிச்சை** இயக்குநர் (முழுக்கூடுதல் பொறுப்பு) | 01.07.1994<br>21.11.1995 |
| திரு. **இரா.கிறித்துதாசு காந்தி** இ.ஆ.ப. இயக்குநர் (முழுக்கூடுதல் பொறுப்பு) | 22.11.1995<br>31.01.1996 |
| திரு. **வை.பழனிச்சாமி இ.ஆ.ப.** இயக்குநர் (முழுக்கூடுதல் பொறுப்பு) | 01.02.1996<br>24.11.1997 |
| திரு. **த.ரா.சீனிவாசன் இ.ஆ.ப.** இயக்குநர் (முழுக்கூடுதல் பொறுப்பு) | 25.11.1997<br>04.07.1999 |
| திரு. **சு.இராமகிருஷ்ணன் இ.ஆ.ப.** இயக்குநர் (முழுக்கூடுதல் பொறுப்பு) | 05.07.1999<br>28.06.2001 |
| **முனைவர் பு.ஏ.இராமையா இ.ஆ.ப.** இயக்குநர் (முழுக்கூடுதல் பொறுப்பு) | 29.06.2001<br>16.07.2001 |
| திரு. **தா.சந்திரசேகரன் இ.ஆ.ப.** இயக்குநர் (முழுக்கூடுதல் பொறுப்பு) | 17.07.2001<br>21.06.2005 |
| **முனைவர் பு.ஏ.இராமையா இ.ஆ.ப.** இயக்குநர் (முழுக்கூடுதல் பொறுப்பு) | 22.06.2005<br>21.05.2006 |
| திரு. **இரா.கற்பூரசுந்தரபாண்டியன் இ.ஆ.ப.** இயக்குநர் (முழுக்கூடுதல் பொறுப்பு) | 22.05.2006<br>03.01.2007 |
| திரு.**து.இராசேந்திரன் இ.ஆ.ப.** இயக்குநர் (முழுக்கூடுதல் பொறுப்பு) | 04.01.2007<br>15.11.2007 |
| திரு. **கோ.சந்தானம் இ.ஆ.ப.** இயக்குநர் (முழுக்கூடுதல் பொறுப்பு) | 16.11.2007<br>03.06.2008 |
| **முனைவர் ம.இராசேந்திரன்** இயக்குநர் (முழுக்கூடுதல் பொறுப்பு) | 04.06.2008<br>16.06. 2008 |
| திரு. **வை. கண்ணபுரக் கண்ணன்** இயக்குநர் (முழுக்கூடுதல் பொறுப்பு) | 17.06. 2008<br>01.09. 2008 |
| **முனைவர் இரா.மதிவாணன்** மதிப்புறு இயக்குநர் | 02.09.2008<br>01.09.2011 |
| திரு. **கூ.வ.எழிலரசு** இயக்குநர் (முழுக்கூடுதல் பொறுப்பு) | 02.09.2011<br>30.09.2011 |
| **முனைவர் கா.மு.சேகர்** இயக்குநர் (முழுக்கூடுதல் பொறுப்பு) | 01.10. 2011<br>11.06. 2016 |
| **முனைவர் கோ.செழியன்** இயக்குநர் (முழுக்கூடுதல் பொறுப்பு) | 13.06. 2016<br>14.06. 2017 |
| **முனைவர் கோ.செழியன்** இயக்குநர் | 15.06.2017<br>30.04. 2018 |
| திரு. **தங்க.காமராசு** இயக்குநர் | 24.05.2018<br>இதுநாள் வரை |

# இளைஞர்கள் நடத்திய இணையவழி இலக்கணப் பயிலரங்கம்!

## 7,200–க்கும் மேற்பட்டோர் பயன்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் மற்றும் வேலூர் செந்தமிழ்த் திருத்தேர் அமைப்பு இணைந்து இணையவழியில் நடத்திய அடிப்படை இலக்கணப் பயிலரங்கம் 19.05.2021 முதல் 22.05.2021 வரை நான்கு நாள்கள் சிறப்பாக நடைபெற்றது.

முதல்நாள் நிகழ்வில் தலைமையுரையாற்றிய அகரமுதலி இயக்கக இயக்குநர் திரு. தங்க.காமராசு அவர்கள், “அடிப்படை இலக்கணத்தை அனைவரும் அறிந்திருந்தால் தமிழைப் பிழையின்றிப் பேசவும் எழுதவும் முடியும்” என்று கூறினார்.



திரு.அ.ஜோ. தியோடர் ராஜ்குமார்

முதல்நாள் ‘இனிக்கும் இலக்கணம்’ எனும் தலைப்பில் உரையாற்றிய, வேலூர் ஊரீசு கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர் திரு.அ.ஜோ. தியோடர் ராஜ்குமார் அவர்கள், “தமிழ்மொழியின் இலக்கணம் மிகவும் எளிமையானது என்று கூறியதோடு, இலக்கணம் என்னும் சொல்லை இலகு +அணம் = இலக்கணம் எனப் பிரித்து, இலகு என்றால் எளிமை, அணம் என்றால் உரிமை ஆக்குவது” என்று பொருள் கூறி விளக்கினார். மேலும், இலக்கணக் கோட்பாடு, எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி , எழுத்துகளின் மாத்திரை அளவு போன்ற இலக்கணக் குறிப்புகளையும் அவர் மாணவர்களுக்கு எடுத்துரைத்தார்.

“உலகில் உள்ள எந்தமொழிக்கும் இல்லாத அளவிற்கு நமது மொழியில் இலக்கண, இலக்கிய வளங்கள் நிறைந்து காணப்படுகின்றன” என்று கூறிய அவர், “இன்றைய தலைமுறையினர் தவறின்றித் தமிழ் எழுதிட ஐந்திலக்கணங்களையும் முழுமையாகப் படித்திருத்தல் வேண்டும் என்பதில்லை. எழுத்து மற்றும் சொல்லின் அடிப்படை இலக்கணங்களை அறிந்திருந்தாலே போதுமானதாகும். இன்றைய காலக்கட்டத்தில் நூற்பாக்களை மனனம் செய்வதைவிட அவற்றின் விளக்கமறிந்து பயன்படுத்தும் பாங்கினைத் தெரிந்துவைத்திருப்பதே நன்று” என்று கூறினார். மேலும், “தமிழில் எழுதிடும் பொழுது பிழைகள் ஏற்படுவதற்கு இன்றியமையாக் காரணியாக அமைவது நம்மிடையே வாசிப்புத்திறன் குறைந்து காணப்படுவதே ஆகும். எனவே, தமிழின் தொன்மையினை அறிந்து சிறந்த நூல்களை வாசித்து அடிப்படை அறிவினை வளர்த்துக்கொண்டு பிழையின்றித் தமிழ் எழுதப் பழகிடுவோம்” என்று விளக்கியுரைத்தார்.



முனைவர் ஆ.இந்திரா பிரியதர்ஷினி

இரண்டாம் நாள் நிகழ்வில், மதிப்புறு மொழியியல் பயிற்றுநர் முனைவர் ஆ.இந்திரா பிரியதர்ஷினி அவர்கள் ‘எழுத்துப்பிழைகள்’ என்னும் தலைப்பில் உரையாற்றினார். “எழுத்துப்பிழை என்பது நாம் எழுதிடும்போது நம்மை அறியாமலே செய்திடும் பிழையாகும். இதற்குக் காரணம், நமக்கு எழுத்துகள் குறித்தான தெளிவு இல்லாமையே ஆகும். எழுத்துகளின் வகைகள் மற்றும் அவற்றைக் கையாளும் முறையினை நாம் அறிந்திருந்தால் எழுத்துப்பிழைகளைத் தவிர்க்கலாம்” என்று கூறினார். மேலும், “ந,ன,ண / ல,ள,ழ / ற,ர ஆகிய எழுத்துகளின் வேறுபாடுகளையும், அவற்றின் இன எழுத்துகளையும் தெரிந்திருத்தல் வேண்டும், குறில், நெடில் எழுத்துகளின் வேறுபாடுகளை அறிந்திருக்க வேண்டும்” என்று கூறிய அவர், “வாய்விட்டோ அல்லது மனத்துக்குள் ஒலித்துக்கொண்டோ எழுதுவதனால் எழுத்துப்பிழைகளைத் தவிர்க்கலாம்” என்றும், “வேற்றுமை உருபுகள் மற்றும் அவற்றைப் பயன்படுத்தும் முறையினையும் அறிந்திடுவதால் எழுத்துப்பிழைகளைத் தவிர்க்க இயலும். வல்லினம் மிகும் இடங்கள், மிகா இடங்கள் பற்றிய தெளிவு எழுத்துப்பிழைகளின்றி எழுதிட இன்றியமையானதாகும்” என்றும் எடுத்துரைத்தார்.

மூன்றாம் நாள் நிகழ்வில், நான் ஓர் இ.ஆ.ப. அகாதெமியின் பயிற்றுநர் திரு. தமிழ் இயலன் அவர்கள், ‘சொற்றொடர்ப் பிழைகள்’ என்னும் தலைப்பில் உரையாற்றினார். சொற்றொடர் வகைகள், திணை, பால், எண், இடம், காலம், தன்மை, முன்னிலை, படர்க்கை, ஆகுபெயர்கள், ஓர்– ஒரு, ஈர்– இரு போன்ற சொற்களின் வேறுபாடு மற்றும் பயன்பாடு, தொகை



திரு.தமிழ் இயலன்

நிலைத் தொடர்கள், தொகா நிலைத் தொடர்கள் உள்ளிட்டவை பற்றியும் விளக்கமாக எடுத்துரைத்தார்.

மேலும், "பேச்சுத் தமிழ் வேறு, எழுத்துத் தமிழ் வேறு என்பதனை இன்றைய மாணவர்கள் உணர்ந்திட வேண்டும். அடிப்படையாகச் சொற்றொடர் வகைகள், வினைமுற்று விகுதிகள் மற்றும் அவற்றைப் பயன்படுத்தும் முறையினை அறிந்துவைத்திருப்பது சொற்றொடர்ப் பிழைகளைக் களைவதற்கு ஏதுவாக அமைகிறது" என்றும் கூறினார்.



முனைவர்
மு.கலைவேந்தன்

நான்காம் நாள் நிகழ்வில், திருவையாறு ஔவைக்கோட்டம், தமிழ் ஐயா கல்விக் கழகத் தலைவர் முனைவர் மு.கலைவேந்தன் அவர்கள் 'மாணவர்களுக்கான தமிழ்' எனும் தலைப்பில் உரையாற்றினார். "தமிழை வெறும் பாடமாக மட்டும் எண்ணாமல் நம் தமிழ்மொழி தொன்மையானது, செம்மை நிறைந்தது, இலக்கிய இலக்கண வளமுடையது, பண்பாடு சார்ந்தது, வாழ்வியல் கூறுகளை உள்ளடக்கியது என்ற உணர்வினை மாணவர்கள் பெற வேண்டும்" என்றும், "தாய்மொழிச் சொற்கள் தாய்ப்பாலைப் போன்றவை, பிறமொழிச் சொற்கள் புட்டிப்பாலைப் போன்றவை என்பதனை இளைய தலைமுறையினர் உணந்து பிறமொழிக் கலப்பைத் தவிர்க்க வேண்டும்" என்றும் கூறினார். மொழி என்பது மரபுவழிப்பட்டது என்று விளக்கிய அவர், "குழந்தைப் பெயர், இல்லப்பெயர், தெருப்பெயர், ஊர்ப்பெயர் என அனைத்தும் தமிழிலேயே சூட்டப்படவேண்டும்" என்று வலியுறுத்தினார்.

"தமிழ் படித்தால் தன்னுடைய எதிர்கால வாழ்வு சிறந்து விளங்கிடும் என்னும் நம்பிக்கையுடன்கூடிய விழிப்புணர்வு இன்றைய மாணவர்களிடையே வரவேண்டும்" என்றும், "மதிப்பெண்களுக்காக மட்டுமல்லாமல், உணர்வுடன்கூடிய தமிழ்ப் பற்றினை இன்றைய ஆசிரியர்கள் மாணவர்களுக்கு உணர்த்தினால் மட்டுமே பல்வேறு பிழைகளைக் களைய முடியும்" என்றும் கூறினார்.



சா. செல்வக்குமார்

தொடக்க நாள் மற்றும் நிறைவு நாளில் அகரமுதலி இயக்ககத் தொகுப்பாளர் திருமதி ஜெ.சாந்தி அவர்கள் வரவேற்புரை வழங்க, செந்தமிழ்த் திருத்தேர் இயக்குநர் செல்வன் ச. திவாகர் நன்றியுரை கூறினார்.

இரண்டாம் நாள் செல்வன் ம.ஜ.சந்தீப் (எ) கவிஞர் தூயவன் வரவேற்புரை வழங்க, திருமதி க.தேவிபாலா உதயகுமார் நன்றியுரை கூறினார். மூன்றாம் நாள் செல்வன் வி.தருண் வரவேற்புரை வழங்க, திரு.மு. கோபாலகிருஷ்ணன் நன்றியுரை கூறினார்.



கவிஞர் தூயவன்

முதல் இருநாள்கள் செல்வன் ம.ஜ.சந்தீப் (எ) கவிஞர் தூயவனும், நிறைவான இரு நாள்கள் சொற்கணை சா. செல்வக்குமாரும் பயிலரங்க நிகழ்வுகளை நெறிப்படுத்தி வழங்கினார்கள்.

அடிப்படை இலக்கணம் குறித்த இந்த நான்குநாள் இணையவழிப் பயிலரங்கத்தில் மாணவமாணவிகள், ஆசிரியர்கள், மும்பை உள்ளிட்ட நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் தமிழார்வலர்கள் உள்பட பலர் பங்கேற்றதோடு, நிகழ்வின் நிறைவில் தங்கள் ஐயங்களையும் கூறி, உரிய விளக்கத்தினையும் பெற்றுப் பயனடைந்தனர். மேலும், தங்கள் பகுதியைச் சேர்ந்த மாணவர்களுக்கும் அகரமுதலி இயக்ககம் இதுபோன்ற பயனுள்ள பயிலரங்கங்களை நடத்திட வேண்டும் என்கிற வேண்டுகோளையும் தமிழார்வலர்கள் முன்வைத்தனர்.



செல்வன் ச. திவாகர்

இப்பயிலரங்கத்தினை ஒவ்வொரு நாளும் நேரலையில் 500க்கும் மேற்பட்டோர் பார்த்துப் பயனுற்றதோடு, இதுவரை வலையொளியில் 7200க்கும் மேற்பட்டோர் பார்வையிட்டுள்ளனர். ■



மொழிவளர்ச்சி முதன்முதலாய் முற்றியவன்
தமிழனே!

மோனையுடன் சிறந்தசெய்யுள் பேசியவன்
தமிழனே!"

– 'மொழிஞாயிறு' ஞா.தேவநேயப் பாவாணர்

# இயக்ககத் தோற்றம்–வரலாறு

**இந்திய மொழிகளில் தமிழ்மொழியில்தான் முதன்முதலில் அகராதி உருவாக்கப்பட்டது. சென்னைப் பல்கலைக்கழகம் 1936இல் தமிழில் பேரகராதியை உருவாக்கியது.**



அகரமுதலி இயக்ககத்தின் புதிய அலுவலகம் ( முதல் தளம்)

ஒரு காலத்தில் இந்திய மொழிகள் அனைத்தும் சமற்கிருதத்தை மூலமாகக் கொண்டு அதிலிருந்துதான் உருவாயின என்று கூறப்பட்டது. இராபர்ட் கால்டுவெல் வந்தபின்தான் சமற்கிருதத்திற்குத் தொடர்பே இல்லாத சில மொழிகள் ஒரு குடும்பமாக இருப்பதாகவும் அவை ஒரு மொழிக் குடும்பத்திற்குள் அடங்கும் என்றும் ஆராய்ந்து அவற்றிற்கான ஒப்பியல் இலக்கணத்தையும் உருவாக்கினார். அவர் கூறிய மொழிக்குடும்பமே தமிழை முதன்மையாகக் கொண்ட திராவிட மொழிக்குடும்பம். திராவிட மொழிக்குடும்பத்தில் மிகத்தொன்மையான மொழி தமிழ் ஆகும்.

சமற்கிருதத்தின் துணையில்லாமல் தமிழ் இயங்கக்கூடியது. மேலும் தமிழ்மொழியின் சொற்களுக்கான வேர்மூலங்களும் தமிழாகவே உள்ளன.

எனவே தமிழ் எந்த மொழியையும் சாராத, தனித்தியங்கவல்ல மொழி என்று நிறுவுவதற்குத் தமிழ்ச் சொற்களின் சொற்பிறப்பியலைத் தொகுக்க வேண்டிய தேவை ஏற்பட்டது. ஞானப்பிரகாசர், மாகறல் கார்த்திகேயனார் போன்றவர்கள் இந்த முயற்சியில் ஈடுபட்டனர். ஆனால் முழுவதுமாக அப்பணியைச் செய்யவில்லை.

தேவநேயப் பாவாணர் சொற்பிறப்பியல் பற்றி வேர்ச்சொற்கட்டுரைகள், முதல் தாய்மொழி போன்ற ஆய்வு நூல்களை வெளியிட்டார். அனைத்துத் தமிழ்மொழிச் சொற்களுக்கும் சொற்பிறப்பியல் கண்டுபிடிப்பதற்காக ஒரு துறையையே உருவாக்கித்தர வேண்டுமென்று தமிழக அரசிடம் கோரிக்கை வைத்தார். அப்போது தமிழ்ப்பணி ஆற்றிக்கொண்டிருந்த அறிஞர் பெருமக்களும் 'மொழிஞாயிறு' தேவநேயப் பாவாணரின் கருத்தையே வழிமொழிந்தார்கள்.

சொற்களே மொழிக்கு அடிப்படை. சொற்களைப் பாதுகாத்தால்தான் மொழியைப் பாதுகாக்கவும் மேம்படுத்தவும் முடியும். சொற்கள் பெருகப் பெருக மொழியும் வளர்ந்து உயர்வு பெறும்.

காலந்தோறும் மொழியில் சில சொற்கள் பொருள் மாறுபாடு அடையும்; சில சொற்கள் வழக்கொழியும்; சில சொற்கள் புதிதாக உருவாகும். இவை அனைத்தையும் தொகுத்துப் பதிவு செய்து அகரமுதலி வடிவில் வெளியிடுவதே மொழி வளர்ச்சிக்கான ஆக்கப் பணியாக அமையும். அந்த வகையில், புலமையாளர்கள், பொதுமக்கள், ஆய்வறிஞர்கள், மாணவர்கள் உள்ளிட்ட அனைவருக்கும் பயன்படும் வகையில், தமிழில் சொற்பிறப்பியல் அகரமுதலிகளைத் தொகுத்து வெளியிட வேண்டுமென்று தமிழ்நாடு அரசு விரும்பியது.

சொற்குவை

இதனை நடைமுறைப்படுத்த தனி இயக்ககம் இருந்தால்தான் பணி சிறப்பாக அமையும் என்று எண்ணிய 'முத்தமிழ் அறிஞர்' ஐயா கலைஞர் தலைமை யிலான தமிழ்நாடு அரசு, 1974ஆம் ஆண்டு செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் என்னும் துறைத்தலைமை அலுவலகத்தைத் தோற்றுவித்தது.

உலக மொழிகளில் தொன்மைமிக்கதும், இலக்கணச் செறிவுடையதும், பல்வேறு துறைகளிலும் இலக்கிய வளம் கொண்டதும், மிக விரைவாக வளர்ந்து வரும் அனைத்து அறிவியல் துறைகளுக்குமான கலைச்சொற்களைத் தன் சொல்வளத்திலிருந்தே உருவாக்கிக்கொள்ளும் வல்லமை வாய்ந்ததுமான தமிழ்மொழியில், சொல்லின் பொருளைத் தெளிவாகப் புரிந்துகொள்ளுவதற்கு உரிய வழிகாட்டுதல் தேவையாகும்.

தமிழ்மொழியின் ஒவ்வொரு சொல்லமைப்பையும் அறிந்து சிறப்பாக வெளிப்படுத்தும் ஆற்றலைப் படைப்பாளர்களும், கல்வியாளர்களும் பெற வேண்டுமெனில், தமிழின் வேர்மூலங்களை வெளிப்படுத்தும் சொற்பிறப்பியல் அகராதி அவர்களுக்கு மிகவும் இன்றியமையாதவை.




எனவே, தமிழின் சொற்களுக்குச் சொற்பிறப்பியலுடன் கலந்த பேரகரமுதலியை இவ்வியக்ககம் 1974இல் உருவாக்கத் தொடங்கி 2011 வரையிலான 38 ஆண்டுகளில் 13,327 பக்கங்களில் 31 தொகுதிகளை உருவாக்கியது.

அதனைத்தொடர்ந்து 31 தொகுதிகளையும் சுருக்கி 1000 பக்க அளவில் சுருக்கப்பதிப்பு ஒன்றை ஒரே தொகுதியாகவும், 500 பக்க அளவில் வினைச்சொல் அகரமுதலி ஒன்றை ஒரே தொகுதியாகவும் 2016 இல் உருவாக்கியது.

1300 மூலமான சொற்களை எடுத்துக்கொண்டு அவற்றிற்கான வேர்ச்சொற்களை மட்டும் எடுத்து ‘வேர்ச்சொல் சுவடி’ என்ற நூலையும், 1ஆம் வகுப்பிலிருந்து 5ஆம் வகுப்பு வரையிலான மாணவர்களுக்கு நல்ல தமிழ்ச்சொற்களை அறிமுகப்படுத்தும் வண்ணம் ‘நற்றமிழ் அறிவோம்’ என்னும் தூயதமிழ் அகராதி நூலையும் இவ்வியக்ககம் வெளியிட்டது.

சொற்பிறப்பியல் அகரமுதலி உருவாக்கத்திற்கென்றே தொடங்கப்பட்ட அகரமுதலி இயக்ககம் அதன் பணியை நிறைவு செய்தவுடன் பல்வேறு அகரமுதலிகளையும் உருவாக்குவதுடன், கலைச்சொற்கள் உருவாக்கும் பணியையும் மேற்கொண்டது.

மிகக் குறைந்த பணியாளர்களைக் கொண்ட இவ்வியக்ககம் தன் ஆற்றலுக்கு மேல் ஒரு மாதத்திற்கு 1000 கலைச்சொற்களை உருவாக்கி அரசாணை பெற்று, இணையம்வழியே பொதுமக்களின் பயன்பாட்டிற்காக வெளியிட்டு வருகிறது. அறிவியல் தொழில்நுட்ப முன்னேற்றக் காலத்தில் அனைத்துத் துறைகளிலும் கலைச்சொற்களைத் தமிழில் உருவாக்கத் தேவையுள்ளது.




அந்த வகையில் உலககெங்கிலும் பரவியுள்ள தமிழர்கள் அந்தந்த நாட்டிலும் பல துறைகளிலும் அறிஞர்களாகப் பணியாற்றுகின்றனர். அவர்கள் பயன்படுத்திக் கொள்ளும் வகையில் இயக்ககத்தில் உருவாக்கப்பட்ட சொற்களை ‘சொல் வைப்பகத்தில்’ சேகரித்து வைத்துள்ளது. அதற்குச் ‘சொற்குவை’ என்று பெயரிடப் பெற்றது.

அதற்கெனத் தனி வலைத்தளம் உருவாக்கப்பட்டு அது ‘சொற்குவை.காம்’( www.sorkuvai.com ) என்ற பெயரில் இயங்குகிறது. இந்த வலைத்தளம்வழி உலகத்தமிழர்கள் இந்தச் சொற்களை எடுத்துப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

பொதுவாக, ஒவ்வொரு மொழியிலும் கல்வி நிறுவனங்களில் மட்டுமே அகராதிகள் உருவாக்கப்படுகின்றன. ஆனால் தமிழ்நாடு அரசு அகரமுதலிக்கென்றே ஒரு துறையைத் தொடங்கியுள்ளது.

இந்தியாவில் அகரமுதலித் துறையை ஓர் அரசே உருவாக்கி இயக்கி வருவது தமிழ்நாடு அரசு மட்டுமே எனக் கருதப்படுகிறது. தமிழ்நாட்டு அரசின் கீழ் இயங்கும் மற்ற துறை இயக்ககங்களைப் போலல்லாமல் இவ்வியக்ககம் சொல்லாராய்ச்சிப் பணிகளையே முகாமையாகச் செய்கிறது.

மொழி வளர்ச்சிக்கும், பாதுகாப்பிற்கும் இவ்வியக்ககமே ஆணிவேராகத் திகழ்கிறது. ஒரு மொழியின் பாதுகாப்பிற்குத் தனி இயக்ககம் கட்டாயம் தேவை என்றும், அவ்வியக்ககம் அரசின் நேரடி ஆளுகைக்குக்கீழ் தனித்து இயங்கக்கூடியதாக இருந்தால் மட்டுமே இடையறாமல் இப்பணியைச் செய்ய முடியும் என்பதற்கும் இவ்வியக்ககமே சான்றாக விளங்குகிறது. ■

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககச் செயற்பாடுகள்

- 'முத்தமிழ் அறிஞர்' கலைஞர் அவர்களின் மொழிச்சிந்தனையில் உதித்த இயக்ககம்.
- 1974ஆம் ஆண்டு 'மொழிஞாயிறு' தேவநேயப் பாவாணர் அவர்களை முதல் இயக்குநராகக் கொண்டு தனிஇயக்ககமாகத் தோற்றுவிக்கப்பட்டது.
- தமிழ்நாடு அரசின் நேரடிக் கட்டுப்பாட்டில் இயங்கும் துறைத்தலைமை இயக்ககம்.
- தமிழ்ச் சொற்களின் காப்பகம்; கருவூலம்.
- காலத்திற்கேற்ப புதிய தமிழ்க் கலைச்சொற்களை உருவாக்கும் அறிவுத் தொழிற்சாலை.
- அகராதியியல் வல்லுநர்களையும் மொழி ஆராய்ச்சியாளர்களையும் கொண்டு இயங்கும் தாய்த்தமிழின் கருவறை.

## இயக்ககச் செயற்பாடுகள்:

- 13,327 பக்கங்களைக் கொண்ட செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலியின் 31 தொகுதிகள்.
- 31 தொகுதிகளின் பிழிவாக, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலியின் சுருக்கப்பதிப்பு.
- 'தமிழ்வினைச்சொல் அகரமுதலி'.
- போட்டித் தேர்வுகளுக்கு உதவும் 'வேர்ச்சொல் சுவடி'
- பள்ளி மாணவர்களுக்கு வண்ணப் படங்களுடன் கூடிய 'நற்றமிழ் அறிவோம்' எனும்தூய தமிழ் அகராதி.
- ஆண்டுக்கு ஆண்டு வெளியீடுகளின் விற்பனையில் முன்னேற்றம்.
- 'நடைமுறைத் தமிழ் அகராதி'. (அச்சில்)
- 'மாணவர்இலக்கியத் தமிழகராதி'. (அச்சில்)
- தமிழில் வழங்கும்பிறமொழிச் சொற்களுக்கு இணையான தமிழ்ச் சொற்களின் அகராதி. (அச்சில்)
- செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலியின் திருந்திய பதிப்பு.

## சொற்குவை:

- இயக்ககத்திற்காகத் தனி வலைத்தளம். (www.sorkuvai.com)
- இணையம்வழித் தமிழ்பரப்பக் கணினித் தொழில்நுட்ப நிறுவனங்களுடன் கைகோர்ப்பு.
- இந்தியா முழுவதிலிருந்தும் தொடர்பு கொள்ளும் கட்டணமில்லா அழை மையம். (14469)
- அகராதியியல் அறிஞர்களுடன் மாதம் இரண்டு முறை கூடும் தமிழ்க் கலைக்கழகக் கூட்டங்கள்.
- 7620 உலகத் தமிழர்கள் வலைத்தளத்தில் பதிவு.
- 83 கலைக்கழகக் கூட்டங்களில் 29,200 தமிழ்க் கலைச்சொற்கள் வடிவமைப்பு.
- 4 அகராதியியல் வல்லுநர் குழுக் கூட்டங்கள் (தமிழறிஞர்கள், மருத்துவர்கள், தமிழ் அமைப்புகள், ஊடகவியலாளர்கள்)
- கல்லூரிகள் தோறும் அகராதியியல் விழிப்புணர்வுக் கூட்டங்கள்.
- 16 கல்லூரிகளில்'சொல்உண்டியல்' வழி 28,076 சொற்கள் பெற்றுள்ளமை.
- 11,350 மாணவர்கள் 1300 அறிஞர்கள் கூட்டங்களில் பங்கேற்பு.
- 22,859 மாணவர்கள் தமிழில் கையெழுத்து.
- அயல்நாட்டு அறிஞர்கள் 39பேர்இயக்ககம் வருகை.

## 2019-2020 ஆம் ஆண்டிற்கான அறிவிப்புகள்/ நடவடிக்கைகள்:

- மயங்கொலிச் சொல்லகராதி. ( தொகுப்பில் )
- தமிழ் மரபுத்தொடர் அகராதி. ( தொகுப்பில்)
- பையடக்கத் தமிழகராதி. ( தொகுப்பில் )
- ஆண்டுதோறும் நவம்பர் 8,9ஆம் நாள்களில் தமிழ் அகராதியியல் நாள்விழா; பன்னாட்டுக் கருத்தரங்கம், பள்ளி மாணவர்களுக்கான மாநிலம் தழுவிய போட்டிகள்.
- மாதந்தோறும் சொற்குவை வலைத்தளத்தில் 'சொல்வயல்' என்னும் திங்கள் மின்னிதழ். ( சூன் 2020 முதல்)
- தேவநேயப் பாவாணர் மற்றும் வீரமாமுனிவர் பெயர்களில் தமிழ்நாடு அரசு விருது.

## 2020-2021 ஆம் ஆண்டிற்கான அறிவிப்புகள்/ நடவடிக்கைகள்

- சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சித்திட்டம் (4நாள்கள்/ 200 மாணவர்கள்/ 16 பயிற்றுநர்கள்).
- தூயதமிழ்ப் பற்றாளர்விருது (37).
- தூயதமிழ் ஊடக விருது (காட்சி மற்றும் அச்சு ஊடகம் 2)
- நற்றமிழ்ப் பாவலர்விருது (மரபு மற்றும் புதுக்கவிதை 2)
- சொல்லின் தாய்விருது (37)
- வல்லுநர்குழுக் கூட்டம்.
- தமிழர் வாழ்வியற் பண்பாட்டு அகராதி (அரசாணை எதிர்நோக்கல்)
- ஒருபொருட் பன்மொழி அகராதி (தொகுப்பில்)
- வட்டார வழக்குச் சொற்பொருள் அகராதி (அரசாணை எதிர்நோக்கல்)
- சென்னை, சாந்தோம் நெடுஞ்சாலை எம்.ஆர்.சி. நகரில் உள்ள 11 அடுக்குகளைக் கொண்ட நகர்நிரு வாக அலுவலகக் கட்டடத்தின் முதல் தளத்தில் 2500 சதுரடியில் தொழில் நுட்பத்தோடுகூடிய அழகான உள்கட்டமைப்புடன்இயக்கக அலுவலகம் வடிவமைக்கப்பட்டு, தற்போது இயங்கி வருகிறது.

# அறிய வேண்டிய அரிய செய்தி -13

## தமிழில் மாலைமாற்றுச் சொற்கள்

ஆசுகவி, மதுரகவி, சித்திரகவி, வித்தாரகவி என்கிறநான்கு வகைக் கவிதைப் பாகுபாட்டில் சித்திரகவி என்பது ஓவியக்கவி, மிறைக்கவி என்றும் அழைக்கப் படுகிறது. தொல்காப்பியம் கூறும் வண்ணங்கள் இதன் தோற்றுவாயாகும். திருமங்கையாழ்வாரால் பாடப்பெற்ற "திருவெழுகூற்றிருக்கை" ஓவியப் பாங்குடன் அமைந்த சித்திரகவியாகும். இவரைப் பின்பற்றி அருணகிரிநாதரும் பாம்பன் சுவாமிகளும் சித்திரகவி படைத்துள்ளனர். இந்தச் சித்திரகவியின் பிரிவுகளுள் ஒன்று மாலைமாற்று ஆகும்.

மாலைமாற்று என்பது, ஒரு சொல் அல்லது ஒரு தொடர் இடப்பக்கமிருந்து வலப்பக்கமாகப் படித்தாலும், அதையே மாற்றி வலப்பக்கமிருந்து இடப்பக்கமாகப் படித்தாலும் ஒரே பொருளைத் தரும்படி அமைவதாகும். சான்றாகச் சில...

**தமிழ் மாலைமாற்றுச் சொற்கள்:**

மாமா, தாத்தா, காக்கா, பாப்பா, தந்த, குடகு

**தமிழ் மாலைமாற்றுத் தொடர்கள்:**

தோடு ஆடுதோ,

தேரு வருதே,

மோரு தாருமோ,

மாடு சாடுமா,

மாடு ஓடுமா ?

போதே போ,

மேள தாளமே

"தேரு வருதே மோரு வருமோ

மோரு வருமோ தேரு வருதே"

இருவழியொக்கும் சொல், இருபக்கமொருங்கு சொல் என்றெல்லாம் வழங்கப்பெறும் மாலைமாற்றுச் சொல்லானது ஆங்கிலத்தில் Palindrome என்று குறிக்கப்படுகிறது. கிரேக்க வேர்மூலத்திலிருந்து பெறப்பட்ட Palindrome என்ற சொல்லை ஆங்கில எழுத்தாளரான பென் சான்சன் என்பவர் கி.பி.17 ஆம் நூற்றாண்டில்தான் எடுத்தாளுகின்றார். ஆக்சுபோர்டு ஆங்கில அகராதியில் Tattarrattat என்பதே நீண்ட மாலைமாற்றுச் சொல்லாக உள்ளது.

**ஆங்கிலத்தில் மாலைமாற்றுச் சொற்கள்:**

Civic, Radar, Level, Madam, Pop, Noon, Refer, Eve, Eye

**ஆங்கிலத்தில் மாலைமாற்றுத் தொடர்கள்:**

Do gees see God?

Was it a cat I saw?

பொதுவாக, மாலைமாற்றுத் தொடர்களில் வரும் இடைவெளிகள், நிறுத்தற்குறிகள், குறில் நெடில் வேறுபாடு போன்றவை கவனத்தில் கொள்ளப்படுவதில்லை.

கி.மு. 79ஐச் சேர்ந்த இலத்தீன் சொல்லான Sator Arepo Tenet Opera Rotas என்பதே இதுவரை கண்டறியப்பட்ட பழைமையான மாலைமாற்றுச் சொல்லாகக் கருதப்படுகிறது. ஆராய்ந்து பார்த்தால், 'மொழிஞாயிறு' தேவநேயப் பாவாணரால் ஞால முதன்மொழியாகக் குறிக்கப்பெறும் தமிழில் இதற்கு முன்பே மாலைமாற்றுச் சொற்களும் சொற்றொடர்களும் இருக்க வாய்ப்புள்ளது.

உலகிலேயே மிக நீளமான மாலைமாற்றுச் சொல் ஃபின்னிஷ் மொழியில் உள்ளதாகச் சொல்லப்படுகிறது. ஃபின்னிஷ் மொழியின் 19 எழுத்துகளைக் கொண்ட saippuakivikauppias என்ற சொல் மிக நீண்ட மாலைமாற்றுச் சொல்லாக கின்னஸ் உலக சாதனை புத்தகத்தில் இடம்பெற்றுள்ளது.

திருஞானசம்பந்தர் சீகாழியிலுள்ள சிவபெருமானைப் போற்றிப் பாடியுள்ள 'மாலைமாற்றுத் திருப்பதிகத்தில்' திருக்கடைக்காப்புச் செய்யுளைச் சேர்த்து மொத்தம் 11 மாலைமாற்றுச் செய்யுள்கள் உள்ளன. ஒரு சோறு பதமாய் அவற்றுள் ஒன்று...

"யாகாயாழீ காயாகா தாயாரார்ா தாயாயா

யாயாதா ராராயாதா காயாகாழீ யாகாயா"

இச்செய்யுளை, யாகா யாழீ காயா காதா யார் ஆர் ஆதாய் ஆயாய் ஆயா தார் ஆர் ஆயா தாக ஆயா காழீயா கா யா எனச் சீர் பிரித்துப் பொருள் காண வேண்டும்.

**செய்யுளின் பொருள்:**

யாகா – வேள்விப் பயனாக விளங்குபவனே

யாழீ – யாழ் இசைப்பவனே

காயா – அருளுருவத் திருமேனி எடுப்பவனே

காதா – 'காதுதல்' ஆகிய அழித்தல் தொழிலைச் செய்பவனே

யார் ஆர் – எத்தகையவர்களுக்கும்

ஆதாய் ஆயாய் – ஆகின்ற தாய் ஆயினவனே

ஆயா – ஆராய முடியாத

தார் ஆர் ஆயா – ஆத்தி மலரை மாலையாக அணிந்தவனே

தாக ஆயா – வேட்கையுற்ற தாருகாவனத்து முனி பத்தினியர் கூட்டத்தை உடையவனே

காழீயா – சீகாழி இறைவனே

கா – எம்மைக் காத்தருள்க

யா – எவ்வகைத் துன்பங்களிலிருந்தும்

மாதவச் சிவஞானயோகிகளின் 'காஞ்சிப் புராணம்' மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையின் 'திருநாகைக்காரோணப்புராணம்' ஆகிய தமிழ்நூல்களிலும் மாலைமாற்றுப் பாக்கள் உள்ளன.

**திரையிசையில் மாலைமாற்று:**

'வினோதன்' என்னும் தமிழ்த்திரைப்படத்தில் இடம்பெற்றுள்ள "மேக ராகமே மேள தாளமே தாரா ராதா" என்ற பாடல் இந்தியாவின் முதலாவது மாலைமாற்றுப் பாடலாக அறியப்படுகிறது. இப்பாடலை மதன் கார்க்கி எழுத, டி. இமான் இசையமைத்துள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

- முனைவர் வே.கார்த்திக்
தொகுப்பாளர், அகரமுதலி இயக்ககம்



# மொழி காக்கும் அகராதிகள்

'அகரம்' என்பது 'அ' என்ற எழுத்தையும், 'ஆதி' என்பது 'முதல்' என்ற பொருளையும் குறிக்கும். எனவே தமிழில் 'அ' என்னும் எழுத்தை முதலாகக் கொண்டு சொற்களை வரிசைப்படுத்திப் பொருள் சொல்லும் நூல் (அகரம் + ஆதி = அகராதி) அகராதி என்று அழைக்கப்படுகின்றது. அகராதியானது அகரமுதலி, அகரவரிசை என்ற வேறுபெயர்களாலும் அழைக்கப்படுகின்றது. சொற்களின் களஞ்சியமாகவும், மொழியைக் காக்கும் ஆவணமாகவும் அகராதி விளங்குகிறது.

## நிகண்டுகளும் அகராதிகளும் :

மொழியில் ஒவ்வொரு காலத்திலும் புதிய சொற்கள் சேர்ந்து கொண்டே இருக்கும். எனவே, மொழியில் உள்ள சொற்களுக்குப் பொருள் தெரிந்துகொள்ள வேண்டிய தேவை எல்லாக் காலங்களிலும் உண்டு. தமிழில் கிடைத்துள்ள, மூவாயிரம் ஆண்டுகளுக்கும் முற்பட்ட நூலான தொல்காப்பியத்திலேயே அகராதிக் கூறுகள் அமைந்திருப்பதை நாம் அறிய முடிகிறது. சொல்லதிகாரத்தின் 'உரியியலில்' 120 சொற்களுக்கும், 'இடையியலில்' சில சொற்களுக்கும், பொருளதிகாரத்தின் 'மரபியலில்' சில சொற்களுக்கும் பொருள் விளக்கம் தரப்பட்டுள்ளன.

தொல்காப்பியம் என்னும் தொடக்கப்புள்ளியைத் தொடர்ந்து சொல்லுக்குப் பொருள் சொல்ல செய்யுள் வடிவிலான நிகண்டுகள் படைக்கப்பட்டன. சேந்தன் திவாகரம் எனப்படும் திவாகர நிகண்டு, பிங்கல நிகண்டு, சூடாமணி நிகண்டு, கயாதர நிகண்டு, உரிச்சொல் நிகண்டு முதலிய பல நிகண்டுகள் உருவாக்கப்பட்டன.

செய்யுள் வடிவிலான நிகண்டுகள் மனப்பாடம் செய்துகொள்ளும் வகையில் அமைந்திருந்தன. அக்காலத்தில் நிகண்டுகளை முழுமையாகக் கற்றவர்களே பெரும்பண்டிதர்களாக மதிக்கப்பட்டனர். இதனை, "நிகண்டு கல்லாதவன் மண்டு" என்ற பழமொழியினால் அறியலாம்.

## அகராதி – பெயர் அறிமுகம் :

நிகண்டுகள் செய்யுள் வடிவில் பொருள் சொல்லிவந்த நிலையில் சொற்களை அகரவரிசையில் அமைத்துப் பொருள் சொல்லும் வகையில் 1594 ஆம் ஆண்டு சிதம்பர இரேவண சித்தர் அகராதி நிகண்டை இயற்றினார். இவரே 'அகராதி' என்ற பெயரையும் அறிமுகப் படுத்தியுள்ளார்.

## அயல்நாட்டினரின் அகராதிக்கொடை :

நம் நாட்டிற்கு மதம் பரப்ப வந்த ஐரோப்பிய மதம் பரப்புநர்கள் மொழிப்புரிதல், கருத்துப் பரிமாற்றம் ஆகிய தேவைகளைக் கருத்தில்கொண்டு, இருமொழி, பன்மொழி அகராதிகளைப் படைத்தனர். அந்த அகராதிகள் அவர்கள் நம்மொழியைப் புரிந்துகொள்ளவும், நாம் அவர்கள் மொழியைப் புரிந்துகொள்ளவும் தொடக்கத்தில் பயன்பட்டன; அவையே இன்றும் பயன்படுகின்றன.

1679இல் ஆந்தம் தெப்ரோயன்சா என்பவர் தமிழ்– போர்ச்சுக்கீசிய அகராதியை இயற்றினார். ஃபாபிரிசியஸ்,தமிழ் – ஆங்கில அகராதியையும், இராட்லர் தமிழ்– ஆங்கில அகராதியையும், வின்சுலோ ஆங்கிலம் – தமிழ், தமிழ்–ஆங்கில அகராதிகளையும் இயற்றினார்கள். பிற்காலத்தில் தமிழ்ச் சொல்லுக்கு ஆங்கிலச் சொல்லாலும், ஆங்கிலச் சொல்லுக்குத் தமிழ்ச் சொல்லாலும் பொருள் சொல்லும் அகராதிகள் பல படைக்கப்பட்டதற்கு மேற்கூறிய அகராதிகளே அடிப்படையாக அமைந்தன.

இத்தாலி நாட்டைச் சார்ந்த கான்ஸ்டன்டைன் ஜோசப் பெஸ்கி என்னும் இயற்பெயரைக் கொண்ட வீரமாமுனிவர் 1732 இல் பெயர், பொருள், தொடை, தொகை என்னும் நான்கு பிரிவுகளை உள்ளடக்கிய சதுரகராதியை இயற்றினார். இந்த அகராதிதான் தற்போதுள்ளவாறு அகரவரிசையில் தமிழ்ச் சொல்லுக்குத் தமிழ்ச் சொல்லாலேயே பொருள் கூறும் அகராதிகள்தோன்றுவதற்கு அடிப்படையாக அமைந்தது. அதன் காரணமாகத்தான் வீரமாமுனிவர் 'தமிழ் அகராதியியலின் தந்தை' என்று போற்றப்படுகின்றார்.

## அகராதியின் தேவை :

அகராதி என்பது சொல்லுக்குப் பொருள் சொல்லும் நூல். தேவையான நேரங்களில் மட்டும் அதனை எடுத்துப் பொருள் தெரிந்துகொண்டால் போதும் என்ற தவறான எண்ணம் இன்று நம்மிடையே பலருக்கும் இருக்கின்றது. சொற்கள் இல்லாமல் மொழி இல்லை. எனவே மொழியைக் காக்க வேண்டும் என்றால் சொற்களைக் காக்க வேண்டும். அதற்கு அகராதிகள் தேவை.

தமிழ் நம் தாய்மொழி. அப்படியிருக்க தமிழ்– தமிழ் அகராதிகள் எதற்குத் தேவை என்பது பலரும் கேட்கும் கேள்வி. தமிழ், கல்வெட்டுக் காலம் தொடங்கி கணினிக்காலம் வரையிலான நீண்ட வரலாற்றைக் கொண்ட மொழி. சொல்வளம் நிறைந்த மொழி.

எனவே தமிழின் சொல்வளத்தையும் பொருள் ஆழத்தையும் அறிந்துகொள்ள தமிழ் அகராதிகள் தேவை.

சான்றாக, சொல்லுதலின் வகையைக் குறிக்க தமிழில் ஏறத்தாழ முப்பத்தொன்பது சொற்கள் உள்ளன. அவை

| சொல்: | சிறப்புப் பொருள்: |
|---|---|
| 1. அசைத்தல் | அசையழுத்தத்துடன் சொல்லுதல். அசையழுத்தம் (accent) |
| 2.அறைதல் | அடித்து (வன்மையாய் மறுத்து)ச் சொல்லுதல் |
| 3 இசைத்தல் | ஓசை வேறுபாட்டுடன் சொல்லுதல் |
| 4. இயம்புதல் | இசைக்கருவி இயக்கிச் சொல்லுதல் |
| 5.உரைத்தல் | அருஞ்சொற்களுக்கு அல்லது செய்யுள்களுக்குப் பொருள் சொல்லுதல் |
| 6.உளறுதல் | ஒன்றிருக்க ஒன்றைச் சொல்லுதல் |
| 7.என்னுதல் | என்று சொல்லுதல் |
| 8.ஓதுதல் | காதிற்குள் மெல்லச் சொல்லுதல் |
| 9.கத்துதல் | குரலெழுப்பிச் சொல்லுதல் |
| 10.கரைதல் | அழைத்துச் சொல்லுதல் |
| 11. கழறுதல் | கடிந்து சொல்லுதல் |
| 12. கிளத்தல் | இன்னதென்று குறிப்பிட்டுச் சொல்லுதல் |
| 13. கிளத்துதல் | குடும்ப வரலாறு சொல்லுதல் |
| 14.குயிலுதல், குயிற்றுதல் | குயில்போல் இன்குரலிற் சொல்லுதல் |
| 15.குழறுதல் | நாத் தளர்ந்து சொல்லுதல் |
| 16.கூறுதல் | கூறுபடுத்திச் சொல்லுதல் |
| 17.சாற்றுதல் | பலரறியச் சொல்லுதல் |
| 18.செப்புதல் | வினாவிற்கு விடை சொல்லுதல் |
| 19.நவிலுதல் | நாவினால் ஒலித்துப் பயிலுதல் |
| 20.நுதலுதல் | ஒன்றைச் சொல்லித் தொடங்குதல் |
| 21.நுவலுதல் | நூலின் நுண்பொருள் சொல்லுதல் |
| 22. நொடித்தல் | கதை சொல்லுதல் |
| 23. பகர்தல் | பண்டங்களைப் பகுத்து விலை சொல்லுதல் |
| 24.பறைதல் | மறை (இரகசியம்) வெளிப்படுத்திச் சொல்லுதல் |
| 25. பன்னுதல் | நிறுத்தி நிறுத்திச் சொல்லுதல் |
| 26.பனுவுதல் | செய்யுளில் புகழ்ந்து சொல்லுதல் |
| 27.புகலுதல் | விரும்பிச் சொல்லுதல் |
| 28. புலம்புதல் | தனக்குத்தானே சொல்லுதல் |
| 29. பேசுதல் | ஒருமொழியிற் சொல்லுதல் |
| 30. பொழிதல் | இடைவிடாது சொல்லுதல் |
| 31. மாறுதல் | உரையாட்டில் மாறிச் சொல்லுதல் |
| 32. மிழற்றுதல் | மழலைபோல் இனிமையாகச் சொல்லுதல் |
| 33.மொழிதல் | சொற்களைத் தெளிவாகப் பலுக்கிச் சொல்லுதல் |
| 34.வலத்தல் | கேட்பார் மனத்தைப் பிணிக்கச் சொல்லுதல் |
| 35.விடுதல் | மெல்ல வெளிவிட்டுச் சொல்லுதல் |
| 36.விதத்தல் | சிறப்பாய் எடுத்துச் சொல்லுதல் |
| 37. விள்ளுதல் | வெளிவிட்டுச் சொல்லுதல் |
| 38. விளத்துதல் | (விவரித்துச்) சொல்லுதல் |
| 39.விளம்புதல் | ஓர் அறிவிப்பைச் சொல்லுதல் |

இதுபோல் தமிழ்மொழியில் ஒரு பொருளுக்கு நுணுக்கம், பொருள் வேறுபாடு கருதி பல சொற்களும் உருவாகியிருக்கின்றன.

இவற்றைத் தமிழ்மொழியைப் பயன்படுத்துவோர் அனைவரும் அறிந்திருக்க வாய்ப்பில்லை. எனவே இதைப் பொதுவாகப் பதிவு செய்திருந்தால் மட்டுமே அனைவரும் பயன்படுத்த முடியும். இப்பொதுப்பதிவே அகராதி ஆகும்.எனவே அகராதிமுகாமையான ஒரு நூல் ஆகிறது. மொழி வளர்ச்சியடைய இதன் தேவையும் அதிகமாகிறது.

காலந்தோறும் சொற்களின் பொருள் மாற்றத்தை அறிந்துகொள்ளவும் அகராதிகள் தேவை. சான்றாக, சங்க இலக்கியங்களில் நாற்றம் என்ற சொல் ‘நறுமணம்’ என்ற பொருளிலேயே வழங்கப்பட்டுள்ளது. ஆனால், இன்று அச்சொல் ‘தீமணம்’ என்ற பொருளில் மட்டுமே சொல்லப்பட்டுவருகிறது. இதுபோன்ற சொல்பொருள் மாற்றங்களை உணர அகராதிகள் தேவை.

அகராதிகள் சொற்களின் பொருளை மட்டும் பதிவு செய்யாமல்,

1. சொற்களின் வகைப்பாடு
2. சொற்களின் பலுக்கல் (உச்சரிப்பு) முறை
3. தமிழில் காலந்தொறும் பொருள் மாறுபாடு
4. ஆங்கிலத்தில் இணையான பொருள்
5. அவ ற்றின்மேற்கோள்கள்
6. (பிறமொழிகளில் )இனச்சொல்
7. சொற்பிறப்பியல்

எனப் பல கூறுகளையும் உள்ளடக்கிப் பதிவு செய்கின்றன.

சொற்களைப்பாதுகாக்கவும், அதன்மூலம் மொழியைப் பாதுகாக்கவும், தமிழின் சொல்வளம் அறியவும்,மொழியின் சொல்லாழம் சொல்லவும்,சொற்களின் பொருள்மாற்றத்தைப் புரிந்துகொள்ளவும்,மொழியின் தொன்மையை உணர்த்தவும், அகராதிகள் காலந்தோறும் படைக்கப்பட வேண்டியது கட்டாயமாகும்.

ஒவ்வொரு மொழியிலும் அகராதிகள் உருவாகி அம்மொழிகளைக் காத்து நிற்பது போல் அருந்தமிழையும் அகராதிகள் காக்கின்றன. ■

# சித்த மருத்துவத்தில் யோகம்!

'கையக் காலநீட்டி மடக்குவாங்களே, அதுக்குப் பேர் தானே யோகா ?' , என்றார் அந்த விவசாய முதியவர்.

யோகாசனம் என்றால் என்ன ?

எதுக்குச் செய்றாங்க ?

செஞ்சா என்ன ஆகும்... ?

எவ்ளோ காலமா இந்த யோகாசனம் இருக்கு... ?

இந்த முறையோடு ஆதிகுரு யாா்... ?

என்றபடி கேள்விகளை அடுக்கினாா் .

சித்த மருத்துவராகிய நான் அருகில் சென்று விளக்க ஆரம்பித்தேன்.

"யுஜ் என்னும் சமஸ்கிருதச் சொல்லில் இருந்த வந்த யோகா என்னும் சொல்லுக்குத் தனிப்பட்டவரின் நனவுநிலை அல்லது ஆன்மா பிரபஞ்ச சக்தியுடன் இணைதல் என்று பொருள். யோகா என்பது இந்தியாவின் 500 ஆண்டுப் பழைமை வாய்ந்த உடல் சாா்ந்த அறிவு. இவையனைத்தும் உள்ளிருக்கும் மனித மனத்தின், ஆன்மாவின் எல்லையற்ற சக்தியைத் திறந்து திறனை அதிகரிக்கும் ஆழமான அறிவியலைப் பற்றிய மேலோட்டமான கருத்துகள்.

மெய்,வாய், கண், மூக்கு, செவி என்ற ஐம்புலன் களையும் அடக்கி ஆள்வது மனம். ஆனால் மனம் நிலையில்லாது அலைந்து திரியும் தன்மை கொண்டது. மனிதன் மனத்தை அடக்கி ஆள யோகம் துணை புரிகின்றது. யோகம் என்பது அஷ்டாங்க யோகங்களில் ஒன்று.

ஆனத்த யோகத்தில் கூறியபடி "சித்தத்தை அபிவிருத்தி செய்து, அதை பிரபஞ்சத்தைக் குறித்துச் சிந்திக்கச் செய்வது" தான் இதன் நோக்கமாகும். யோகத்தின் இறுதி இலட்சியம் மூலாதாரத்தில் இருந்து குண்டலினி சக்தியை எழுப்பி பிரம்ப நிர்வாணம் அடைதல் (இறைவனுடன் ஒன்றிவிடுதல்)

யோகம் என்பது ஆசனங்களை மட்டும் குறிப்பவை அல்ல, மேலே கூறியவாறு வீடுபேறு (இறைவனுடன் ஒன்றிவிடுதல்) அடைய வழி வகுக்கும் வழிகளில் யோகமும் ஒன்றாகும். யோகம் என்பது ஆசனங்கள், பிராணாயாமம், காயகற்பம் இவை அனைத்தையும் கொண்டதே. ஆனால் குண்டலினியை எழுப்புவது சாதாரணமன்று. உடலையும் மனத்தையும் ஒருமுகப்படுத்த சில நிலைபாடு தோற்ற அமைப்புகள் (இருக்கைகள்) உதவின. அவையே ஆசனங்கள்.




மரு.ம.ஸ்ரீசக்தி லோகிஷா
விரிவுரையாளர், வர்ம மருத்துவம்,
தேசிய சித்த மருத்துவ நிறுவனம்,
தாம்பரம், சென்னை.


"இயம நியமமே எண்ணில்லா ஆதனம்
நயமுறு பிராணாய ாமம் பிரத்தியாகராஞ்
சயமிகு தாரணை தியானஞ் சமாதி
அயமுறும் அட்டாங்கம் ஆவதும் ஆமே"

–திருமூலர் திருமந்திரம்(3ஆ ம் தந்திரம்)

உடற்பயிற்சிகள் தேக உடற்கட்டுகளை மட்டுமே வன்மைப்படுத்தும். யோகாசனப் பயிற்சிகள் உடலுக்குப் பயிற்சி கொடுப்பதோடு மட்டுமின்றி மனம், மூளை ஆகியவற்றை இணைத்து உள்ளுறுப்புகளை உற்சாகத்துடனும் வன்மையுடனும் செயல் பட வைக்கிறது.

பிராணாயாமம்:

பிராணாயாமம்என்பது மூச்சின்நீட்டிப்பும்மூச்சினைக் கட்டுப்படுத்துவதும் ஆகும். சரியான உத்திகளுடன் மூச்சுப் பயிற்சி செய்வதால் அதிக பிராணவாயுவை இரத்தம் மற்றும் மூளைக்கு அனுப்பி பிராணசக்தியைக் கட்டுப்படுத்தி மகத்தான சக்தியை அளிக்கும். பிராணாயாமம் பல்வேறு யோகாசனங்களுடன் கைகோர்த்துக் கொண்டது போல் இணைந்திருக்கும். இந்த இரண்டு யோகங்களின் கொள்கைகள் சுய

ஒழுக்கம் மற்றும் மனம் உடல் சுத்திகரிப்பின் மிக உயர்ந்த வடிவமாகக் கருதப்படுகிறது. பிராணாயாம உத்திகள் தியானம் என்னும் ஆழமான அனுபவத்துக்கு நம்மைத் தயார் செய்யும்.

இதன் ஆதாரங்கள் என்ன ?

ஆசனங்கள் எண்ணிக்கை தொகையிடாதாயின. திருமூலரும் தம் தமிழ் 3000இல் ஆசனம் எண்ணிக்கையில் அடங்காதவை என்பதை "எண்ணிலா ஆதனம்" என்றார்.

ஆனத்த யோகத்தில், சிவபெருமான் 84 இலட்சம் யோகாசனங்களைஉலகத்துஅனைத்துஉயிரினங்களின் நிலைகளையும் கொண்டு உருவாக்கியுள்ளதாகக் கூறப்பட்டுள்ளது. ஆனால் தற்போதைய நிலையில் 84 ஆசனங்களே பெரிதும் பயன்படுத்தப்பட்டு வருகின்றன.

அவற்றுள் ஞான சாதனைக்குரிய ஆசனங்கள் "5". அவை,

1. பத்மாசனம்

2. பத்திராசனம்

3. குக்குடாசனம்

4. வீராசனம்

5. கோமுகாசனம்

பதஞ்சலி முனிவரும் தாம் இயற்றிய நூல்களில் ஆசனங்களைப் பற்றி குறிப்பிட்டு உள்ளார். அகத்திய முனிவரும் யோகத்தைப் பற்றி நூல்களில் குறிப்பிட்டுள்ளார்." எனக் கூறி முடித்தேன்"

"இவ்வளவு அருமையான நன்மைகள் இருக்கின்றனவா !.. இந்த யோகாசனத்தில், நம் மூதாதையர்கள் இவ்வளவு நல்ல விசயங்களை நமக்கு விட்டுச் சென்றுள்ளனர். இதனை நாமும் உபயோகித்து அடுத்த தலைமுறையினர்க்கும் கொடுக்க வேண்டும். முதலில் வீட்டிற்குச் சென்று அனைவருக்கும் விழிப்புணர்வு ஏற்படுத்தி, கற்றுக்கொள்ளச் சொல்ல வேண்டும்" என்றபடி கிளம்பினார்,அந்த விவசாயி

ஆசனங்கள் செய்து நமது உடல்நலம் பெறுவதோடு, மனவலிமையை அதிகரித்தும் முழுமையான வாழ்வைப் பெறுவோம்..

